23rd September 1958]

THE HON. SRI M. A. MANICKAVELU : முக்கியமாக கிராமப் பகுதிகளிலே கடன் வாங்குவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது என்று தெரிகிறது. ஆகவே இன்னும் அதிகமாக கஷ்டம் ஏற்படாமல் இருப்பதற்கு என்ன செய்யவேண்டுமோ, அதைச் செய்வதுதான் நல்லது என்று தோன்றுகிறது.

*Smallpox*

* 445 *Q*.—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether smallpox is widely prevalent in the Tindivanam town;

(*b*) the number of persons who lost their lives due to smallpox till 1st of May 1958; and

(*c*) the preventive steps taken by the Government in this regard?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No.

(*b*) There were 33 deaths from smallpox from the beginning of the year up to the week ended 3rd May 1958.

(*c*) Preventive measures such as disinfection of houses and intensive vaccination and revaccination of the population, etc., were carried out.

SRI M. JAGANNATHAN : Are the Government aware of the fact that the slum areas in the Tindivanam Municipality, where mostly Harijans live, have been badly neglected by the concerned medical authorities and no preventive measures have been taken in those areas?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir, I have no such information. If any epidemic breaks out, generally the authorities concerned first visit the slum areas and then take necessary steps.

*Drainage system in Tiruchirappalli*

* 446 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to prevent the flow of Tiruchirappalli municipal drainage water into the Cauvery river at points above the bathing ghats on the southern bank?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

*Nagapattinam Port*

* 447 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state the amount allotted for the improvement of the Nagapattinam Port during 1958–59?

THE HON. SRI P. KAKKAN : A sum of Rs. 2,42,000 has been provided in the Budget for 1958–59 for making improvements to the Port.

[23rd September 1958

SRI N. K. PALANISAMI : எனனென்ன திட்டங்களுக்காக செலவு செய்யப்படுகிறது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Provision of a sea-face wall.

(*b*) realignment of South Groyne,

(*c*) providing pier with mobile pump for entrance channel, and

(*d*) improvements and extensions to wharves.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, what is the total amount to be spent for the completion of the scheme and when is it likely to be completed?

THE HON. SRI P. KAKKAN : Sir, a separate question may be put.

SRI N. S. RAMALINGAM : இந்தத் துறைமுகத்திற்கு முக்கியமாக வேண்டிய டிரட்ஜர் எப்பொழுது வாங்கிக் கொடுக்க முடியும் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது சொல்லுவதற்கு இல்லை. இருந்தாலும், கனம் அங்கத்தினர் தனியாக கேள்வி போட்டால் அதுபற்றி கவனிக்கலாம்.

SRI A. VEDARATHNAM : நாகப்பட்டிணம், கடலூர் போன்ற முக்கியமான துறைமுகங்களுக்கு போகவேண்டிய கப்பல்கள் எல்லாம் சென்னை துறைமுகத்தில் சில நாட்கள் வரையில் காத்துக் கொண்டிருக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருப்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? இந்த சிறு துறைமுகங்கள் அபிவிருத்தி அடையவேண்டுமானால் கப்பல்கள் அந்தந்த துறைமுகங்களுக்குச் சென்று சரக்குகள் அங்கு இறக்குமதி செய்யப்படுவதுதான் நியாயம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா ? அதற்கு உத்தரவு இடுமா ?

THE HON. SRI P. KAKKAN : அது தெரிந்துதான் இந்தச் சிறிய துறைமுகங்களை அபிவிருத்தி செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறது.

SRI K. S. G. HAJA SHERIFF : Sir, are the Government aware that the working conditions depend upon the condition of the bar and if so, what is the position of providing a dredger at the bar?

THE HON. SRI P. KAKKAN : Sir, a separate question may be put.

SRI M. C. MUTHUKUMARASWAMY : நாகப்பட்டிணம் துறைமுகத்தில் கப்பல் நிற்கும் இடத்திற்கும், கரைக்கும் ஏறக்குறைய 5 மைல் தூரம் இருக்கிறது. அதனால் சரக்குகள் இறங்குவதற்கும் பிரயாணிகள் இறங்குவதற்கும் அதிக கஷ்டம் ஏற்படுகிறது. செலவும் அதிகமாகிறது. சென்னையைப்போன்று அந்தத் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்கு ஏதாவது திட்டம் தயாராக இருக்கிறதா, அல்லது இனியாவது தயாரிப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P KAKKAN : சென்னை போன்று அபிவிருத்தி செய்வதற்கு திட்டம் இல்லை. இருந்தாலும் அந்தத் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதற்கு திட்டம் இருக்கிறது.

SRI A. GOVINDASAMY : இந்தத் துறைமுக அபிவிருத்தித் திட்டம் எப்பொழுது முடிக்கப்படும் ? அதற்கு வேண்டிய மெஷினர் வந்து சேர்ந்துவிட்டதா ?

THE HON. SRI P. KAKKAN : தனி கேள்வி கேட்கவேண்டும்.

*Houses for Harijans*

* 448 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state what is the districtwise allotment of funds for the construction of houses for Harijans during 1958–59?

THE HON. SRI P. KAKKAN : A statement [a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : 15–2–1958-ல் புது டில்லியில் நடந்த பின்தங்கிய வகுப்பு இலாகாவைச் சேர்ந்த ராஜ்ய மந்திரிகள் மகாநாட்டில் ஒவ்வொரு வீட்டிற்கும் ரூ. 750 போதாது என்றும் இந்த மான்யத்தை அதிகப்படுத்தவேண்டும் என்றும் நமது ராஜ்ய ஹரிஜன நல இலாகா மந்திரி இந்திய சர்க்காரிடம் தெரிவித்தார்களா ? அப்படியென்றால், இந்திய சர்க்கார் அதற்கு என்ன பதில் அளித்தார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : அம்மாதிரி தெரிவித்தது வாஸ்தவம்தான். ஆனால் அது மத்திய சர்க்காரால் பரிசீலனை செய்யப்பட்டு இன்னும் பதில் வரவில்லை.

SRI J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லாவில் 125 வீடுகள் தான் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. நீலகிரியில் குளிர் காரணமாக குடிசையில் வாழ்வதற்கே முடியாத நிலைமை இருப்பதனால், உடனடியாக அங்குள்ள எல்லா ஹரிஜனங்களுக்கும் வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : எல்லோருக்கும் உடனடியாக வீடுகள் கட்டிக்கொடுக்க முடியாது. இருந்தாலும் குளிர் பிரதேசமாய் இருப்பதால், அந்தப் பிரதேசத்திற்கு சிறிது அளவு சலுகை காட்டலாம்.

SRI M. JAGANNATHAN : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கும் குறிப்பிலே தென் ஆற்காடு ஜில்லாவிற்கு 266 வீடுகள்தான் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. இந்த மாநிலத்திலே தென் ஆற்காடு ஜில்லாவிலே தான் அதிகமாக ஹரிஜனங்கள் வாழ்கிறார்கள். ஆகவே, அவர்களுக்கு போதுமான அளவுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்லுவது போல் இந்த மாநிலத்தில் தென் ஆற்காடு ஜில்லாவில் ஹரிஜனங்களின் ஜனத்தொகை அதிகம்தான். அதை எந்த ஜனத்தொகையை அடிப்படையாகக் கொண்டோ அல்லது வேண்டுகோளின் பேரிலோ, எந்த நோக்கத்தோடு பிரித்தார்களோ தெரியாது. அங்கத்தினர் கோரிக்கை கவனிக்கப்படும்.

SRI K. P. PALANISWAMI : வீடு கட்டும் திட்டத்தை கொஞ்சம் நிறுத்தி விட்டு, பட்டா பூமியில் இருந்துகொண்டு அநேக கஷ்டங்களுக்கு உள்ளாகும் ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் மாத்திரம் வாங்கித்தருவதற்கு அரசாங்கம் முன்வருவார்களா ?

---

[a] Printed as Appendix VI on page 585 infra.